உ

வாணிதுணை.

மகாகவியாகிய

கம்பரருளிச்செய்த

# சரசுவதியந்தாதி.

இஃது - அஷ்டாவதானம்

பூவை

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-குஜா

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1892ளு.

அல்லும் பகலும் மனவாத
முந்துதித்தாற்
கல்லுஞ்சொல்
லாதோ கவி.

கட்டளைக்கலித்துறை.

சீர்தந்தவெள்ளிதழ்ப்பூங்கமலாசனத்
தேவிசெஞ்சொற்
றூர்தந்தவென்மனத் தாமரையாட்டி
சரோருகமேற்
பார்தந்தநாதனிசைதந்தவாரணப்
பங்கயத்தாள்
வார்தந்தசோதியம் போருகத்தாளை
வணங்குதுமே. (சு)

வணங்குஞ்சிலைநுத லுங்கழைத்
தோளும் வனமுலைமேற்
சுணங்கும்புதிய நிலவெழுமேனியுந்
தோட்டுடனே

பிணங்குங்கருந்தடங் கண்களு
நோக்கிப் பிரமனன்பா
லுணங்குந்திருமுன்றிலாய் மறைநான்
கு முறைப்பவளே. (உ)

உரைப்பாருரைக்குங் கலைகளெல்லா
மெண்ணி யுன்னையன்றித்
தரைப்பாலொருவர் தரவலரோதண்
டரளமுலை
வரைப்பாலமுதுதந் திங்கெனைவாழ்
வித்த மாமயிலே
விரைப்பாசடைமலர் வெண்டாமரை
ப்பதி மெல்லியலே. (ங)

இயலானதுகொண்டுநின் றிருநாமங்க
ளேத்துதற்கு
முயலாமையாற்றடு மாறுகின்றே
னிந்தமூவுலகுஞ்

செயலர்லமைத்தகலைமகளே
　　நின் றிருவருளுக்
கயலாவிடாம லடியேனையு
　　முவந்தாண்டருளே.　　　　(சு)

அருக்கோதயத்தினுஞ் சந்திரோதய
　　மொத் தழகெறிக்குஞ்
திருக்கோலநாயகி செந்தமிழ்ப்பா
　　வை திசைமுகத்தா
லிருக்கோதுநாதனுந் தானுமெப்
　　போது மினிதிருக்கு
மருக்கோர்லநாண்மல ராளென்னை
　　யாளுமடமயிலே.　　　　(ரு)

மயிலேமடப்பிடி யேகொடியேயிள
　　மான்பிணையே
குயிலேபசுங்கி ளியே யன்னமேமனக்
　　கூரிருட்கோர்

வெயிலேநிலவெழு மேனிமின்னே
யினி வேறுதவம்
பயிலேன்மகிழ்ந்து பணிவேனுனது
பொற் பாதங்களே. (சு)

பாதாம்புயத்திற் பணிவார்தமக்குப்
பலகலையும்
வேதாந்தமுத்தியுந் தந்தருள் பாரதி
வெள்ளிதழ்ப்பூஞ்
சீதாம்புயத்தி லிருப்பாளிருப்பவென்
சிந்தையுள்ளே
யேதாம்புவியிற் பெறலரிதாவ
தெனக்கினியே. (எ)

இனிதா னுணர்வதெண்ணென்கலை
யாளை யிலகுதொண்டைக்
கனிநாணுஞ்செவ்விதழ் வெண்ணிற
த்தாளைக் கமலவயன்

றனிநாயகியை யகிலாண்டமும்
பெற்ற தாயைமணப்
பனிநான்மலருறை பூவையையாரண
ப் பாவையையே. (அ)

பாவுந்தொடையும் பதங்களுஞ்சீரும்
பலவிதமா
மேவுங்கலைகள் விதிப்பாளிடம்
விதி யின்முதிய
நாவும்பகர்ந்ததொல் வேதங்கணன்
கு நறுங்கமலப்
பூவுந்திருப்பதம் பூவாலணிபவர்
புந்தியுமே. (கூ)

புந்தியிற்கூரிரு ணீக்கும்புதிய
மதிய மென்கோ
வந்தியிற்றோன்றிய தீபமென்கோநல்
லருமறையோர்

சந்தியிற்றேன்றுந் தபனனென்கோ
மணித்தாம மென்கோ
வுந்தியிற்றேன்றும் பிரான்புயந்தோ
யு மொருத்தியையே. (க0)

ஒருத்தியை யொன்றுமிலாவென்மன
த்தி னுவந்துதன்னை
யிருத்தியைவெண்கமலத்திருப்பாளை
யெண் ணென்கலைதோய்
கருத்தியையைம்புல னுங்கலங்காமற்
கருத்தைதயெல்லாந்
திருத்தியையான்மற வேன்றிசை
நான்முகன் றேவியையே. (கக)

தேவருந்தெய்வப் பெருமானுநான்
மறை செப்புகின்ற
மூவருந்தானவ ராகியுள்ளோரு
முனிவரரும்

யாவருமேனைய வெல்லாவுயிருமிதழ்
வெளுத்த
பூவருமாதி னருள்கொண்டுஞானம்
புரிகின்றதே (௧௨)

புரிகின்ற சிந்தையி னூடேபுகுந்து
புகுந்திருளை
யரிகின்றதாய்கின்ற வெல்லாவறிவி
னரும்பொருளைத்
தெரிகின்றவின்பங் கனிந்தூறிநெஞ்
சந் தெளிந்துமுற்ற
விரிகின்ற தெண்ணெண்கலைமாது
ணர்த்தியவேதமுமே. (௧௩)

வேதமும்வேதத்தி னந்தமுமந்தத்
தின் மெய்ப்பொருளாம்
பேதமும்பேதத்தின் மார்க்கமுமார்க்
கப் பிணக்கறுக்கும்

போதமும்போத வுருவாகியெங்கும்
  பொதிந்தவிந்து
நாதமுநாதவண் டார்க்கும்வெண்
  டாமரை நாயகியே. (கச)

நாயகமான மலரகமாவதுஞான
  வின்பச்
சேயகமான மலரகமாவதுந்
  தீவினையா
லேயகமாறி விடுமகவாது
  மெவ்வுயிர்க்குந்
தாயகமாவதுந் தாதார்சுவேத
  சரோருகமே. (கரு)

சரோருகமேதிருக் கோயிலுங்கை
  களுந் தாளிணையு
முரோருகமுந்திரு வல்குலுநாபியு
  மோங்கிருள்போற்

சிரோருகஞ்சூழ்ந்த வதனமுநாட்ட
 முன் சேயிதமு
மொரோருகமீரனை மாத்திரையான
 வுமைமகட்கே. (கசு)

கருந்தாமரைமலர் கட்டாமரைமலர்
 காமருதா
ளருந்தாமரைமலர் செந்தாமரைமல
 ராலயமாந்
தருந்தாமரைமலர் வெண்டா
 மரைமலர் தாவியெழிற்
பெருந்தாமரைமணக் குங்கலைக்
 கூட்டப் பிணைதனக்கே, (கஎ)

தனக்கே துணிபொரு ளென்னுந்
 தொல்வேதஞ் சதுர்முகத்தோ
னெனக்கேசமைந்த வபிடேகமென்
 னுமிவையவர்தா

மனக்கேதமாற்றி மருந்தென்பசூடு
 மல்லொன்றென்பான்
கனக்கேசமந்திக் கலைமங்கைபாத
 கமலங்களே. (கஅ)

கமலந்தனிலிருப் பாள்விருப்போ
 டங் கரங்குவித்துக்
கமலங்கடவுளர் போற்றுமென்பூவை
 கண்ணிற்கருணைக்
கமலந்தனைக்கொண்டு கண்டொரு
 காற்றங் கருத்துள்வைப்பார்
கமலங்கழிக்குங் கலைமங்கையாரணி
 காரணியே. (கசு)

காரணன்பாகமுஞ் சென்னியுஞ்
 சேர்தரு கன்னியரு
நாரணனாக மகலாத்திருவுமொர்
 நான்மருப்பு

வாரணன்றேவியு மற்றுள்ளதெய்வ
மடைந்தயரும்
ஆரணப்பாவை பணித்தகுற்றேவ
லடியவரோ. (உ0)

அடிவேதநான்குஞ் சிறப்பார்ந்தவேத
மனைத்தினுக்கு
முடிவேதவள முளரிமின்னேமுடி
யாவிரத்ன
வடிவேமகிழ்ந்து பணிவார்தமது
மயவிரவின்
வடிவேயறிந்தென்னை யாள்வார்தலந்
தனில் வேறிலையே. (உக)

வேறிலையென்று ன்டியாரிற்கூடி
விளங்குநின்பேர்
கூறிலையானுங் குறித்துநின்றே
னைம் புலக்குறும்பர்

மாறிலைகள்வர் மயக்காமனின்மலர்த்
தாணெறியிற்
சேறிலையீந்தருள் வெண்டாமரைமலர்
ச்சேயிழையே. (உஉ)

சேதிக்கலாந்தர்க்க மார்க்கங்களெவ்
வெவர் சிந்தனையுஞ்
சோதிக்கலாமுறப் போதிக்கலாஞ்
சொன்ன தேதுணிந்து
சாதிக்கலாமிகப் பேதிக்கலாமுத்தி
தானெய்தலா
மாதிக்கலாமயில் வல்லிபொற்றாளை
யடைந்தவரே. (உங)

அடையபாயநாண்மல ரங்கையிலேடு
மணிவடமு
முடையாளை நுண்ணிடை யொன்று
மிலாளையுப நிடதப்

படையாளியெவ்வுயி ரும்படைப்
பாளிப் பதுமநறுந்
தொடையாளியல்லது மற்றினியா
னாத் தொழுவதுவே. (உச)

தொழுவார்வலம்வரு வார்துதிப்பார்
தந் தொழின்மறந்து
விழுவாருமறை மெய்தெரிவா
ரின்ப மெய்புளகித்
தழுவாரினுங்கண்ணி னீர்மல்குவா
ரொன்க ணுவதென்னே
வழுவாதசெஞ்சொற் கலைமங்கைபா
லன்பு வைத்தவரே. (உரு)

வைக்கும்பொருளுமில் வாழ்க்கைப்
பொருளுமற் றெப்பொருளும்
பொய்க்கும்பொருளன்றி நீடும்
பொருளல்ல பூதலத்தின்

மெய்க்கும்பொருளு மழியாப்
பொருளும் விழுப்பொருளு
முய்க்கும்பொருளுங் கலைமானுணர்
த்துமுணாப்பொருளே. (உசு)

பொருளாவிரண்டும் பெறலாகு
மென்ற பொருள்பொருளோ
மருளாதசொற்கலை வான்பொரு
ளோபொருள் வந்துவந்தித்
தருளாய்விளங்கு மவர்க்கொளியா
யறியாதவருக்
கிருளாய்விளங்கு நலங்கிளர்மேனி
யிலங்கிழையே. (உஎ)

இலங்குந்திருமுக மெய்யிற்புளக
மெழுங்கண்கணீர்
மலங்கும்பழுதற்ற வாக்கும்வலிக்கு
மனமிகவே
துலங்குமுறுவல் செயக்களிகூருஞ்
சுழல்புனல்போற்
கலங்கும்பொழுது தெளியுஞ்சொன்
மானைக் கருதினர்க்கே. (உஅ)

கரியாளகமுங் கண்ணுங்கதிர்முலைக்
கண்ணுஞ்செய்ய
சரியார்கரமும் பதமுமிதழுந் தவள
நறும்
புரியார்ந்ததாமரையுந் திருமேனியும்
பூண்பனவும்
பிரியாதென்னெஞ்சினு நாவினுநிற்
கும் பெருந்திருவே. (உகூ)

பெருந்திருவுஞ்சய மங்கையுமாகியெ
ன்பேதைநெஞ்சி
லிருந்தருளுஞ்செஞ் சொல்வஞ்சி
யைப்போற்றி னெல்லாவுயிர்க்கும்
பொருந்தியஞானந்தருமின்பவேதப்
பொருளுந்தருந்
திருந்தியசெல்வந் தருமழியார்பெரு
ஞ்சீர்தருமே. (ஙo)

சரசுவதியந்தாதி.

முற்றிற்று.

